**SRI A. GOVINDASAMY** : இந்தத் துறைமுக அபிவிருத்தித் திட்டம் எப்பொழுது முடிக்கப்படும்? அதற்கு வேண்டிய மெஷினரி வந்து சேர்ந்துவிட்டதா ?

**THE HON. SRI P. KAKKAN** : தனி கேள்வி கேட்கவேண்டும்.

*Houses for Harijans*

* 448 *Q*.—**SRI P. G. MANICKAM** : Will the Hon. the Minister for Public Works be pleased to state what is the districtwise allotment of funds for the construction of houses for Harijans during 1958–59?

**THE HON. SRI P. KAKKAN** : A statement [a] is placed on the table of the House.

**SRI P. G. MANICKAM** : 15–2–1958-ல் புது டில்லியில் நடந்த பின்தங்கிய வகுப்பு இலாகாவைச் சேர்ந்த ராஜ்ய மந்திரிகள் மகாநாட்டில் ஒவ்வொரு வீட்டிற்கும் ரூ. 750 போதாது என்றும் இந்த மான்யத்தை அதிகப்படுத்தவேண்டும் என்றும் நமது ராஜ்ய ஹரிஜன நல இலாகா மந்திரி இந்திய சர்க்காரிடம் தெரிவித்தார்களா ? அப்படியென்றால், இந்திய சர்க்கார் அதற்கு என்ன பதில் அளித்தார்கள் ?

**THE HON. SRI P. KAKKAN** : அம்மாதிரி தெரிவித்தது வாஸ்தவம்தான். ஆனால் அது மத்திய சர்க்காரால் பரிசீலனை செய்யப்பட்டு இன்னும் பதில் வரவில்லை.

**SRI J. MATHA GOWDER** : நீலகிரி ஜில்லாவில் 125 வீடுகள் தான் ஒதுக்கப்பட்டிருக்கின்றன. நீலகிரியில் குளிர் காரணமாக குடிசையில் வாழ்வதற்கே முடியாத நிலைமை இருப்பதனால், உடனடியாக அங்குள்ள எல்லா ஹரிஜனங்களுக்கும் வீடுகள் கட்டிக்கொடுப்பதற்கு அரசாங்கம் முன்வருமா ?

**THE HON. SRI P. KAKKAN** : எல்லோருக்கும் உடனடியாக வீடுகள் கட்டிக்கொடுக்க முடியாது. இருந்தாலும் குளிர் பிரதேசமாய் இருப்பதால், அந்தப் பிரதேசத்திற்கு சிறிது அளவு சலுகை காட்டலாம்.

**SRI M. JAGANNATHAN** : மேஜை மீது வைக்கப்பட்டிருக்கும் குறிப்பிலே தென் ஆற்காடு ஜில்லாவிற்கு 266 வீடுகள்தான் ஒதுக்கப்பட்டிருக்கின்றன. இந்த மாநிலத்திலே தென் ஆற்காடு ஜில்லாவிலே தான் அதிகமாக ஹரிஜனங்கள் வாழ்கிறார்கள். ஆகவே, அவர்களுக்கு போதுமான அளவுக்கு வீடுகள் கட்டிக்கொடுப்பதற்கு அரசாங்கம் முன்வருமா ?

**THE HON. SRI P. KAKKAN** : கனம் அங்கத்தினர் சொல்லுவது போல் இந்த மாநிலத்தில் தென் ஆற்காடு ஜில்லாவில் ஹரிஜனங்களின் ஜனத்தொகை அதிகம்தான். அதை எந்த ஜனத்தொகையை அடிப்படையாகக் கொண்டோ அல்லது வேண்டுகோளின் பேரிலோ, எந்த நோக்கத்தோடு பிரித்தார்களோ தெரியாது. அங்கத்தினர் கோரிக்கை கவனிக்கப்படும்.

**SRI K. P. PALANISWAMI** : வீடு கட்டும் திட்டத்தை கொஞ்சம் நிறுத்தி விட்டு, பட்டா பூமியில் இருந்துகொண்டு அநேக கஷ்டங்களுக்கு உள்ளாகும் ஹரிஜனங்களுக்கு வீட்டு மனைகள் மாத்திரம் வாங்கித்தருவதற்கு அரசாங்கம் முன்வருவார்களா ?

---

[a] Printed as Appendix VI on page 585 infra.

[23rd September 1958

THE HON. SRI P. KAKKAN : மனைக்கட்டுகள் வாங்கிக்கொடுப்பதற்காக இந்தத் திட்டத்தை நிறுத்தவேண்டாம். வீடுகள் கட்டிக்கொடுப்பதற்கும், மனைக்கட்டுகள் வாங்கிக்கொடுப்பதற்கும், இரண்டிற்கும் சேர்த்து ஏற்பாடுகள் செய்யப்படுகின்றன.

SRI T. VELUCHAMI : வீடுகள் கட்டிக்கொடுக்கும் திட்டத்தின் நோக்கம் என்ன ? அதாவது, ஹரிஜனங்களுக்கு நல்ல வீடுகள் இல்லாத குறைகள் அனைத்தையும் இந்தத் திட்டத்தினால் பூர்த்தி செய்து விடலாம் என்று அரசாங்கம் கருதுகிறதா ?

THE HON. SRI P. KAKKAN : ஹரிஜனங்களுக்கு வீடுகள் இல்லாத குறையை இதன் மூலம் நூற்றுக்கு நூறு மடங்கு தீர்த்துவிடலாம் என்று அரசாங்கம் நினைக்கவில்லை. இதனால் ஓரளவுக்கு அந்தக் குறையை நீக்கலாம். இதைப் பார்த்து தெரிந்துகொண்டு, தன் கையே தனக்கு உதவி என்ற முறையில் அவர்களுக்கு தாங்களாகவே வீடுகள் கட்டிக்கொள்ளுவதற்கு ஏற்பாடுகள் செய்துகொள்ளும் எண்ணம் வரவேண்டும் என்பது தான் நோக்கம்.

SRIMATHI KAMALAMBUJAMMAL : வட்டார அபிவிருத்தி திட்டங்கள் உள்ள இடங்களில் தான் இந்தத் திட்டம் அமுலில் இருக்கிறதா ? அல்லது மற்ற இடங்களிலும் அமுலில் இருக்கிறதா ?

THE HON. SRI P. KAKKAN : எல்லா இடங்களிலும் அமுலில் இருக்கிறது.

SRI M. P. PERIASAMI : பல வருஷங்களுக்கு முன்பு ஹரிஜனங்கள் தங்களுக்கு வீடுகள் வேண்டும், மனைக்கட்டுகள் வேண்டும் என்று சம்பந்தப்பட்ட ஜில்லா அதிகாரிகளுக்கு விண்ணப்பித்துக் கொண்டிருந்தாலும் அவைகள் உடனடியாக கவனிக்கப்படாமல் பல வருஷ காலமாக நீடித்துக் கொண்டேபோகிறது என்பது மந்திரி அவர்களுக்குத் தெரியுமா ? அப்படியிருந்தால் உடனடியாக அந்த மனுக்களை பரிசீலனை செய்வதற்கு அரசாங்கம் உத்தரவு இடுமா ?

THE HON. SRI P. KAKKAN : வீடுகள் கட்டும் திட்டத்தை ஜில்லா அதிகாரிகள், கலெக்டர்கள் வெகு அக்கரையோடு கவனிக்க வேண்டுமென்று சொல்லியிருக்கிறோம். அதனால் இப்பொழுது இதுபற்றி உடனடியாக கவனம் செலுத்தப்படுகிறது. அவர்களை அடிக்கடி ஞாபகப்படுத்தி எவ்வளவு துரிதமாக வீடுகள் கட்டிக்கொடுக்கும் பிரச்னையை தீர்க்கமுடியுமோ அவ்வளவு துரிதமாக வீடுகள் கட்டிக்கொடுப்பதற்கு ஏற்பாடு செய்யப்படுகிறது.

SRI T. IRUSAPPAN : ஹரிஜனங்களுக்காக கட்டிக்கொடுக்கப்பட்ட வீடுகள் பல சேதம் அடைந்தும், இடிந்தும் போயிருக்கின்றன. அவைகளை பராமரிக்க சர்க்கார் உதவி செய்யுமா ?

THE HON. SRI P. KAKKAN : ஏற்கனவே கட்டப்பட்ட வீடுகள் ஓரளவுக்கு சேதமடைந்திருந்தால், அவைகளை பராமரிப்பதற்காக குறிப்பாக பட்ஜெட்டில் தொகை ஒன்றும் ஒதுக்கப்படவில்லை. ஒரு சில இடங்களில் நிலைமை மிகவும் மோசமாக இருந்தால், அதுபற்றி எழுதினால் அதை அரசாங்கம் கவனிக்கலாம்.

DR. SRIMATHI T. S. SOUNDARAM RAMACHANDRAN : சமுதாய நல திட்டப் பகுதியிலே ஹரிஜனங்களுக்கு ரூ. 500, 700 முழுவதும் ஆரம்பத்திலே கடனாக கொடுக்கப்பட்டது. இப்பொழுது ரூ. 500 மான்யமாகவும் ரூ. 200 அவர்கள் கையிலே இருந்தும் போடவேண்டும். இப்பொழுது ஏற்கனவே ரூ. 700, 800 கடனாகக் கொடுக்கப்பட்ட தொகையை வாங்கி வீடுகள் கட்டியிருக்கும் ஹரிஜனங்கள் அதை திருப்பிக் கொடுப்பதற்கு ரொம்பவும் கஷ்டப்படுகிறார்கள். அவர்களுக்கு முன்பு மான்யம் கொடுக்கப்

படவில்லே. அதனுல் அவர்களுக்கும் இந்தத் திட்டத்தை விஸ்தரிக்கும் முறையிலே இந்த மான்யம் கொடுப்பதற்கு அரசாங்கம் நடவடிக்கை எடுக்குமா ?

THE HON. SRI P. KAKKAN : முன்பு கடனுகை கொடுக்கப்பட்டது. இப்பொழுது இந்தத் திட்டம் அமுலுக்கு வந்திருக்கிறது. எற்கெனவே கடன் வாங்கி கட்டப்படும் வீடுகள் கட்டி முடியாத காலனியாக இருந்தால் தான், அதுபற்றி கவனிக்கலாம். எற்கனவே கடன் கொடுத்து முடிந்து விட்டதைப் பற்றி ஒன்றும் செய்ய முடியாது.

SRI A. GOVINDASAMY : ஹரிஜனங்கள் காலனி, ரோடு ஓரங் களில்தான் கட்டவேண்டுமென்று எதாவது நிபந்தனை இருக்கிறதா ? உள்புற கிராமங்களிலும் இந்தக் காலனிகளை அமைப்பதற்கு சர்க்கார் உத்தரவு போடுவார்களா ? இப்பொழுது ரோடு ஓரத்தில்தான் அமைக்கப் படவேண்டுமென்று சொல்லுவதாகத் தெரிகிறது.

THE HON. SRI P. KAKKAN : கனம் அங்கத்தினர் எண்ணம் அப்படி இருப்பதுபோல் தெரிகிறது. எந்தக் கிராமங்களில் எந்த இடத்தில் சர்க்காருக்கு சொந்த இடம் இருக்கிறதோ அந்த இடத்தில் முதலில் வீடுகள் கட்டுகிருேம். ரோடு ஓரத்தில் இருந்தாலும் சரி, ஊருக்குள் இருந்தாலும் சரி அந்த இடத்தில் கட்டுகிருேம். கூடியவரையில் செலவு அதிகமாகாமல் கட்டவேண்டுமென்று நினைக்கிருேம். அரசாங்கத்திற்குச் சொந்தமான நிலங்கள் இல்லாத இடங்களில் நிலங்களை ஆர்ஜிதம் செய்து வீடுகள் கட்டப்படவேண்டும்.

SRI P. G. MANICKAM : இதற்காக கொடுக்கப்படவேண்டிய மான்யத் தொகையை இந்திய சர்க்கார் அனுப்பிவிட்டார்களா ? அப்படி யானுல் எவ்வளவு தொகை அனுப்பப்பட்டிருக்கிறது என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI P. KAKKAN : இந்திய சர்க்கார் இந்தத் திட்டத் தின்கீழ் எவ்வளவு தொகை கொடுக்கவேண்டுமோ அதை கொடுப்பதற்கு தயாராக இருக்கிருர்கள். மேலும் சிறிது அளவு தொகை வேண்டுமென்று சொன்னுலும், அவர்களிடத்தில் நாம் வாங்கிக்கொள்ளலாம்.

DR. SRIMATHI T. S. SOUNDARAM RAMACHANDRAN : இப் பொழுது ஹரிஜனங்களுக்கு மான்யம் கொடுப்பதில் 20, 30 வீடுகள் சேர்ந்து கட்டப்படவேண்டும் என்று சொல்லப்படுகிறது. இதனுல் எழை ஜனங்களுக்கு ரொம்ப கஷ்டமாக இருக்கிறது. அவர்களால் 8, 10 வீடுகள் தான் ஒரே இடத்தில் கட்ட முடிகிறது. அதனுல் 10 வீடுகள் ஒரே இடத்தில் பிளாக்காக கட்டினுலும், அதற்கு சர்க்கார் அனுமதி அளிக்கவேண்டு மென்று கேட்டுக்கொள்ளுகிறேன். நான் ஜாதியைப் பற்றி குறிப்பிட விரும்பவில்லே. இருந்தாலும் செக்கிலியர்கள் மிகவும் தாழ்ந்த நிலேயில் இருப்பது எல்லோரும் அறிந்ததே. ஆகவே, அவர்கள் வீடுகள் கட்டிக் கொள்ளுவதற்கு ஓரளவு பணத்தை கடனுகவாவது கொடுத்து உதவி செய்ய முடியுமா ?

THE HON. SRI P. KAKKAN : குறைந்தது 20 வீடுகள், அதிக பட்சம் 30 வீடுகள் கட்டவேண்டுமென்பது சர்க்கார் உத்தரவு. சில இடங் களில் 20 வீடுகள் கட்டிக்கொள்ளுவதற்கு முன்வராவிட்டால், அதற்காக 20 வீடுகள் கட்டிக்கொடுக்கும் திட்டத்தை நிறுத்தவேண்டாம். அப்படி யாராவது 10, 15 வீடுகள் கட்டிக் கொள்ளுவதற்கு முன்வந்தால் சர்க்கார் அதை எற்றுக்கொள்ளுவதாகத்தான் இருக்கிறது. 8, 10 வீடுகள் கட்டி னுல் அதிகப்படியாக நஷ்டம் எற்படுகிறது, அதற்கு செலவு அதிகமாகிறது என்ற காரணத்தினுல்தான் குறைந்தபட்சம் 20 வீடுகளும், அதிகபட்ச மாக 30 வீடுகளும் கட்டவேண்டுமென்று சொல்லப்படுகிறது. எதாவது ஒரு குறிப்பிட்ட சில இடங்களில்மட்டும் மக்கள் ரொம்ப கஷ்டப்படுகிருர்கள்

என்பதை எழுதினால் அதுபற்றி கவனிக்கலாம். ஆனால் எல்லா இடங்களிலும் இம்மாதிரி 8, 10 வீடுகள் கட்டுவதற்கு அனுமதிக்க முடியாது என்பதை தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

SRI M. P. PERIASAMI : இந்த வீடு கட்டிக் கொடுக்கும் திட்டத்தில் பணமும் செலவாகிறது, கஷ்டங்களும் இருக்கின்றன. ஆனால், இப்பொழுது, ஒவ்வொரு ஜில்லாவிலும், ஹரிஜனங்கள் சொந்த வீடில்லாமல் கஷ்டப்படுகிறார்கள். ஆகவே, வீட்டுக்கு வேண்டிய நிலங்களை ஜாரி செய்து கொடுக்க சர்க்கார் முன்வருமா ? அப்படிச் செய்வதனால், ஹரிஜன மக்கள் வீடில்லாமல் படும் அதிகக் கஷ்டம் நிவர்த்தியாகும் என்பதை சர்க்கார் உணருகிறதா ?

THE HON. SRI P. KAKKAN : ரூபாய் 8 லட்சத்திற்கு அதிகமாகவே மனைக்கட்டுகள் ஆர்ஜிதம் செய்வதில் சர்க்கார் செலவு செய்து இருக்கிறது. வீடு கட்டிக் கொடுப்பது போலவே, இதிலேயும் சர்க்கார் அக்கறை எடுக்கும் என்று தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

*Highly-paid officers.*

* 449 Q.—SRI K. RAMACHANDRAN (on behalf of Sri K. Sattanatha Karayalar) : Will the Hon. the Chief Minister be pleased to state the number of officers who draw a salary of Rs. 2,000 (two thousand) and above per mensem?

THE HON. SRI C. SUBRAMANIAM : 40 (Forty).

*Harijan students*

* 450 Q.—SRI P. G. MANICKAM : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) கோயமுத்தூர் ஜில்லா, தாளவாடி மலைப்பிரதேசத்திலேயிருக்கும் ஜில்லா போர்டு ஆரம்பப் பாடசாலைகளிலே எத்தனை ஹரிஜன மாணவர்களும், மாணவிகளும், 1958-ம் வருஷத்தில் படித்துக்கொண்டிருக்கிறார்கள் ?

(ஆ) எந்தெந்த பாடசாலைகளிலே படித்துக்கொண்டிருக்கும் ஹரிஜனக்குழந்தைகளுக்கு நண்பகல் உணவு அளிக்கப்பட்டு வருகின்றது ?

(இ) 1957–58-ம் ஆண்டில் இதற்காகச் செலவிடப்பட்ட தொகை எவ்வளவு ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) 110 boys, 42 girls.

(*b*) No mid-day meals are supplied in any of the district board schools.

(*c*) Nil.

SRI P. G. MANICKAM : மேற்கண்ட ஜில்லா போர்டு பள்ளிக்கூடங்களிலே ஹரிஜன மாணவர்களுக்கு ஹரிஜன் வெல்பேர் டிபார்ட்மெண்டிலிருந்து ஜில்லா கலெக்டர் மத்தியான சாப்பாடு வசதி செய்கிறார்கள். சில இடங்களிலே, நண்பகல் உணவை அதோடு சேர்த்துப்போட்டு இந்த ஏழை மாணவர்களுக்கு சாப்பாடு போடும் திட்டத்தை சர்க்கார் வகுப்பார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : It is only a suggestion for action, Sir.